உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச்சங்கத் திங்கள் வெளியீடு.

துணர் ௰௯ | சுபானு—மாசி | 1944—பிப்ரவரி | மலர் ௰௧

## புதுக்கோட்டை மன்னர் பொற்புற வாழியர்!

**பு**துக்கோட்டை யரசர் மாட்சிமிக்க இராச ராச **கோபாலத்தொண்டைமான் பகதூர்** அவர்கள் *17—1—44-ல்* அரசாங்கத்தாரிடமிருந்து நாட்டை ஆளும் ஆட்சி உரிமையினை ஏற்றுக்கொண்டமை கேட்டு மகிழ்கின்றோம். புதுக்கோட்டை அரசு எனில் புத்துணர்ச்சியும் புத்தெழுச்சியும் பெற்றுத் தமிழறிஞர் மகிழ்ச்சி யுறுதலை யாமறிவோம். தமிழறிஞர் ஏன் மகிழ்கின்றனர்? இந்நாட்டில் முடிதாங்கிக் கோலோச்சிப் பிறரை—பிறநாடுகளை அடிப்படுத்தி யாண்ட தமிழரசர் மரபிற் றோன்றிய தமிழ்மக்கள் இன்று பிறர்க்கு எல்லாத் துறைகளி லும் அடிமை யுற்றுக் கிடக்கின்றனர், அடிமையுற்ற மக்களிடையே இப் புதுக்கோட்டையரசு ஒன்றேனும் தமிழ் நாட்டில் பிறர்க்கு அடிமை யின்றிப் பண்டைத்தமிழரசர் மாட்சியை நினைவூட்டி இன்றும் கோலோச்சும் பெற்றியில் இலங்குகின்றதே யென்பதனை எண்ணுந்தொறும் எண்ணுந்தொறும் அறிஞர் மகிழ்ச்சி கொள்ளுகின்றனர். தமிழர் அடிமைகளல்லர்; ஆட்சி புரிந்த—புரிகின்ற குடியினர் என்பதனை உலகிற்கு அறிவிக்க இவ்வரசு ஒரு கருவியாயுள்ள தன்றோ? பண்டைத் தமிழரசர் மாட்சியினைத் தமது ஆட்சியில் நிலைநிறுத்த இன்று நம் "தொண்டைமான் பகதூர்" அவர்கள் செங்கோலேந்தித் திகழ் கின்றனர். புதுக்கோட்டையின் முதலரசர் மாண்புமிக்க 'இரகு நாதராய'த் தொண்டைமானிலிருந்து எண்ணின் இவ்வரசர் ஒன்பதாம் அரசராவர். இம்மன்னரின் முன்பிருந்த பல அரசர் களாலும் புதுக்கோட்டை நகரம் நன்கு சீர் திருத்தப்பெற்று நாகரிக ஆட்சிக் குரிய நகராகத் திகழ்கின்றது. இளமையும்,

ஊக்கமுமிக்க இவ்வரசர் ஆட்சி ஏற்பதற்கு முன்னரேயே பலமொழிகளிலும் பயிற்சி பெற்றுள்ளனர். அரசியல் அலுவல்களிலும் பயிற்சி பெற்று நிறைந்த ஆட்சித்திறனும் கைவரப் பெற்றுள்ளனர். கோற்பந்தாடுதல், வேட்டமாடுதல் முதலிய துறைகளிலும் பயிற்சியடைந்துள்ளனர். இவர்கள் ஆட்சிக்கு உறுதுணையாக ஆங்கிலப் பெரு மகனுராய "**சர் அலெக்ஸாண்டர் டாட்டன்ஹாம்**" அவர்கள் திவானுகவும், தமிழ்த் தாயின் தவ மகனுராய "**கான்பகதூர். பி. கலிபுல்லா சாயபு**" அவர்களும், தமிழ்ப் பெரு மகனுராய "**திரு. எம். பரமசிவம் பிள்ளை**" யவர்களும், அகமந்திர அமைச்சாட்சியில் முன்னின் றுரை வழங்கி ஆட்சியை அழகுறுத்து வோராகவும் அமைந்தமை தமிழ் மக்கட்கு மகிழ்விளைவிக்கும் செயலெனக் கூறி மகிழ்கின்ருேம்.

ஒவ்வொரு நாட்டிலும் ஆட்சி யேற்பார் எம்மொழி பேசுகின்றனரோ அம்மொழியை அவர் நாடெங்கும் பரப்புதலும், "அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி" என்ற முறையில் அரசன் மொழியே அரசியல் மொழியாகி ஆக்கம் பெறுதலும் ஆகிய நிகழ்ச்சிகளை யாம் வரலாற்று நூல்களா லறிகின்ருேம். தமிழ் மன்னராய நம் புதுக்கோட்டை வேந்த ராட்சியில் அரசியல் மொழியாகத் தமிழ் மொழி ஆக்கம் பெற வேண்டுமென யாம் அவாவுகின்ருேம். நம் மன்னர் புதுக்கோட்டை நகர மன்றம், நீதி மன்றம், சட்ட மன்றம் முதலிய எல்லா மன்றங்களிலும் தமிழ் முழங்கும் வண்ணம் நற்பெருஞ் செயலாற்றி நாளும் நலன் பெற்று வாழ்வாராக.

நமது புதுக்கோட்டை வேந்தரின் ஆட்சிக்கு உட்பட்ட நிலப் பரப்பு ஆயிரத்து நூற்று எழுபத் தெட்டு சதுரமைல்கள். இச் சமத்தானத்தின் ஆண்டு வருவாய் ஏறக்குறைய இருபத்தோரிலக்கம் வெண்பொற் காசுகள். இருபத்தோ ரிலக்கம் வருவாயுள்ள ஒரு தமிழ் மன்னர் நாட்டில் ஒரு தமிழ்ப் பல்கலைக் கழகம் இருத்தல் வேண்டுமென விரும்புகின்ருேம். பண்டைக் காலத்துப் பாண்டிநா டாண்ட முடியுடை மன்னர்கள் தாங்களே சங்கம் நிறுவி, தமிழ்வளர்த்துப் புலவர் பாடும் புகழுடையோராய்த் திகழ்ந்தனர். நமது மாட்சிமிக்க இராச கோபாலத் தொண்டைமான் பகதூர்" அவர்களும் தமிழ் வளர்க்கும் எம் சங்கம் போன்ற தமிழ்ச்சங்கங்கட் காதரவளித்துத் தமிழ் வளத்தினைப் பெருக்கிப் புகழ் நாட்டித் தமிழ் நாட்டுப் பேரரசராய்த் திகழ்வாராக.

**மதிப்பிற்குரிய நம் மன்னர் எண்ணுக.**

நம் புதுக்கோட்டை யாட்சியிலும் சில குறைபாடுகள் உளவென்பதனை மன்னருக்கு நினைவூட்ட விரும்புகின்ருேம். தமிழ்

மன்னராம் எமது புதுக்கோட்டை வேந்தர் நாட்டிலே ஆண்டு தோறும் வடமொழிப் பண்டிதர்கட் களிக்கும் கொடைப் பொருளினையும், தமிழ்ப் புலவர் புறக் கணிக்கப் பட்டுள்ள நிலைமையினையும் எண்ணி யெண்ணி இக்குறைபாட்டினை யாரிடங்கூறி முறை வேண்டிக் கொள்வதென வழிகாணாது வருந்தி நின்றேம். இன்று முறையிட்டுக் கொள்ள உரிமை யுடைய நமது மன்னர் உரிமையேற்றுக் கோலேந்தித் திகழ்கின்றனர். முறையிடுகின்றேம்; செவிசாய்ப்பாராக. தமிழ்நாட்டிலே தமிழ்மொழிப் புலவர்களை யொதுக்கி வடமொழிப் புலவர்கட்கு மாத்திரம் பரிசளிப்பா? அப்பரிசளிப்பும் ஆரிய அரசரா ஆரிய மொழி வளர்ச்சி கருதி யளிக்கின்றனர்? தமிழ் ஆட்சியிலே தமிழ் நாட்டிலே ஆரியமொழிப் புலவர்க்குப் பரிசளித்துப் போற்றப் பெறுதலையும், தமிழ்ப் புலவர்கள் புறக்கணிக்கப்பட்டுத் தள்ளப் பெறுதலையும் வேற்று நாட்டில் வேற்றுமொழியாளரிடத்திற் காண இயலுமா? என்பதனை அன்பர்கள் எண்ணிப் பார்க்க வேண்டுகின்றேம். இச்செயல் நம் நாட்டிற்குக் குறை, குறை, பெருங்குறையன்றோ? இக் குறையினைக் கூறி முறை வேண்டுகின்றேம். சூழ்ச்சியில் வலியரால் நலிவெய்தி முறை வேண்டும் எமக்கு முறைவழங்கித் தமிழின் துறை பலவுந் தழைத்தோங்க நமது மன்னர் தண்ணருள் புரிவாராக.

**வாழ்த்துகின்றேம்.**

இவ்வாண்டில் புதுக்கோட்டையில் நிகழ்ந்த கலைமகள் விழா நாளில் அவ்வூர் நகரமன்றத்திற் சொற்பொழி வாற்ற நம் கரந்தைச் சங்கச் சார்பில் ஒருவரை அழைத்திருந்தனர். அவ்வழைப்பினை யேற்ற சங்கத்தார் எம்மை அவண்சென்று அப்பணியினை நிறைவேற்றிவர ஆணையிட்டனர். அவ்வாணையை முடிமேற்றாங்கிய யாம் அங்குச் செல்லுங்காலை வழியிடையே நண்புற்றாரொருவர் "எங்குச் செல்கின்றீரென வினவினர். யாம் 'புதுக்கோட்டை "வித்வத் சபை"யில் சொற்பொழி வாற்ற வேண்டிச் செல்கின்றேம்' என மொழிந்தேம். அந்நண்பர் வியப்புற்று "வித்வத் சபை"க்கும் கரந்தைத் தமிழ்ச் சங்கத்திற்கும் என்ன தொடர்பு? குலாங் காதிருக்கும் கோகுலாட் டமிக்கும் எவ்வளவு தொடர்புண்டோ அவ்வளவு தொடர்பன்றோ உங்கட்கும் வித்வத் சபைக்கும்" என மனங் குழைந் துரைத்தனர். தமிழ் வேந்தர் நாட்டினில் தமிழிற் சொற்பொழி வாற்ற இடம்பெறல் தமிழர் ஒருவர்க்கு இத்துணை வியப்பினைத் தருதல் எற்றிற்கோ? எனும் ஐயங் கொண்ட யாம், "நும்முரை வியப்பினை விளைவிக்கின்றது; காரணம் அறியக் கூடவில்லை; உண்மை என்"னென

வினவினேம். எம் வினவினைச் செவிமடுத்த அந்நண்பர் "அங்கு நடப்பது ஆரிய ஆட்சி; ஆரிய ஆட்சியில் தமிழ்ச் சொற்பொழிவுக்கு இடந் தருவரோ? எனும் ஐயத்தால் நும்மை வினவினேம்" எனக்கூறி முடித்தார். இவ்வுரையாடலின் பெற்றியையும் அன்று புதுக்கோட்டையில் நிகழ்ந்த சொற்பொழிவிற் குறிப்பிட்டுள்ளேம். இத்தகைய எண்ணங்கட்கு இனி இடமில்லை யென எண்ணுகின்றேம். இன்றுடன் ஆரிய ஆட்சிக் கிடனின்றித் தமிழ் மன்னர் ஆட்சியுரிமையினை ஏற்றுத்திகழ்கின்றனர். புதுக்கோட்டை யாட்சி தமிழாட்சியாக இனிமாற்றமுற்றுத் திகழுமென்றெண்ணுகின்றோம். முன் கலிங்கப்போரில் வென்றி கொண்ட 'கருணாகரத் தொண்டைமான்' கலிங்கத்துப் பரணி யெழக் காரணனா யிருந்தாற் போல, நம் **இராசகோபாலத் தொண்டைமான் பகதூர்**'' அவர்களும் தமிழ்ப் பகையைவென்று 'தமிழ்ப்பரணி' யெழக் காரணராய் நின்று என்றும் நற்செயலாற்றி நற்புகழ் கொண்டு பொற்புற நீடூழி வாழ வேண்டுமென இறைவனை வழுத்தி வணங்குகின்றோம்.

பொழிலாசிரியர்.

---

**ந. மு. வே. நாட்டார் 60-ம் ஆண்டு நிறைவுவிழா வேண்டுகோள்.**

நாவலர், பண்டித, திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் திருச்சி எஸ். பி. ஜி. கல்லூரியிலும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் தலைமைச் சொற்பொழிவாளராகப் பணிபுரிந்து, தற்பொழுது கரந்தைப் புலவர் கல்லூரித் தலைவராக ஊதியங்கருதாமலே பணியாற்றி வருகின்றார்கள்.

நாட்டாரவர்கள் கல்லூரிகளில் எண்ணிறந்த மாணாக்கர்களுக்குக் கல்வி கற்பித்ததுடன் தனியாகத் தமிழ் பயின்ற பலர்க்குக் கற்பித்தும், தமிழ்ப்பொழில், செந்தமிழ்ச் செல்வி முதலாய திங்கள் வெளியீடுகளில் ஆராய்ச்சியுரைகள் எழுதியும், நக்கீரர், கபிலர், சோழர் சரித்திரம் முதலாய சிறந்த ஆராய்ச்சி நூல்கள் பலவற்றை எழுதி வெளியிட்டும், ஆத்திசூடி முதலிய நீதி நூல்கட்கும், கார்நாற்பது முதலிய கீழ்க்கணக்கு நூல்கட்கும், திருவிளையாடற்புராணம் சிலப்பதிகாரம் முதலிய சமய காப்பிய நூல்கட்கும் சிறந்த உரைகள் வரைந்தும், தமிழ் நாடெங்கணுமுள்ள கழகங்களிலே தலைமை வகித்தும், சொற்பொழிவாற்றியும் தமிழ் மொழியானது தூய்மையும் வளமும் பெறும்படி பணிபுரிந்து வந்துள்ளார்கள். இங்ஙனம் பல்லாற்றாலும் தமிழ்ப்பணி புரிந்துவருகின்ற நாட்டாரவர்களுக்கு வருகிற தாரண ஆண்டு சித்திரைத் திங்கள் 26-ஆம் நாள்

(8—5—'44) 60-ஆம் ஆண்டு நிறைவெய்துகிறபடியால், அவ் விழாவைக் கொண்டாடவேண்டியது தமிழ் மக்களாகிய நமது கடமையாகும். ஆகவே, தமிழ்ப்பற்றுடைய அன்பர்கள் அனைவரும் இவ்விழாவைச் சிறப்புறச் செய்வதற்குப் பொருளுதவி செய்யுமாறு வேண்டிக்கொள்ளுகிறோம்.

**விழா நடத்தும் முறை**

1. நாவலர் நாட்டாரவர்களுக்கு விழா நாளில் வாழ்த்து மடல் வழங்கல். 2. நினைவு மலர் வெளியிடுதல். 3. உருவப் படத்தினைச் சங்கத்தே திறந்து வைத்தல். 4. கரந்தைப்புலவா கல்லூரி மாணவர்களுக்குப் பரிசு வழங்க நிதி ஏற்படுத்தல். 5. பொற்கிழியளித்தல். 6. சொற்பொழிவுகள் நிகழ்த்து வித்தல். 7. ஏழைகட்கு உணவளித்தல் முதலியன.

இங்ஙனம்,

தங்களன்பிற்குரிய,

தஞ்சை,
1—1—'44

**விழாக் கழக உறுப்பினர்கள்.**

**குறிப்பு:**

இவ்விழாக்கழக உறுப்பினர்கள் இருபத்தெழுவர் ஆவர். இவருள் பூண்டி, பெருநிலக் கிழவர், திரு. அ. வீரையாவாண்டையார் அவர்கள் கழகத் தலைவராகவும், கரந்தைத் தமிழ்ச் சங்கத் தலைவர் இராவுசாகிபு **ஐ. குமாரசாமிபிள்ளை** B. A., அவர்களும், கோவை, கமலா மில்ஸ் மானேஜிங் ஏஜெண்ட் R. V. **இலட்சுமையா நாயுடு** அவர்களும் துணைத்தலைவர்களாகவும், திருச்சி. **கி. ஆ. பெ. விசுவநாதம்** அவர்கள் பொருளாளராகவும், தஞ்சைக் கலியாணசுந்தரம் உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் வித்துவான். **அ. வடிவேலர்** அவர்கள் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளனர்.

இவ்விழா வீறுற நிகழப் பொருள் அனுப்பும் அன்பர்கள் "பொருளாளர் கி. ஆ. பெ. விசுவநாதம், மணிவாசகத் தமிழகம் திருச்சிராப்பள்ளி" என்ற முகவரிக்கு அனுப்பி உதவ வேண்டுகின்றோம்.

பொழிலாசிரியர்.

## நகரதூதன்.

திருச்சிராப்பள்ளியினின்று கிழமைதோறும் வெளிப் போந்து தமிழரில்லங்கட்குச் சென்று தமிழ் நாட்டு நிலைமையை யறிவித்துத் தமிழரையூக்கி வந்த நம் நகரதூதன் சில்லாண்டு களாகத் தன் றூதிற்குரிய தொழிலை மறந்து ஒதுங்கி நின்றுன். நம் தூதன் இன்மையால் நீதிக்கட்சியின் செயல்கள் பல தடை யுற்றன. "பேணுநர்த்தன"த்தால் பேரெழுச்சியூட்டி எதிரிகள் வாய்கட்காப் பறைந்து நந்தமிழாக்கத்தைப் பெருக்கிவந்த நகர தூதனை யாம் அன்புடன் வரவேற்று நல்வரவு கூறுகின்றேம்.

பொழிலாசிரியர்.

## திருப்பத்தூர் தமிழிசைக் கழகம்.

**1944** சனவரி **24**-ம் நாள் திங்கட்கிழமை இந்நகர உயர் நிலைப் பள்ளியில் நகரப் பொது மக்கள் சார்பாக ஓர் கூட்டம் திரு. சிதம்பரம்செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அக்கூட்டத்தில் 'அண்ணுமலைப் பல்கலைக் கழகத்' தமிழ் விரி வுரையாளர் திரு. **வித்துவான் இராமநாதன் செட்டியார்** அவர்கள் 'தமிழிசைக் கழகம்' என்பது பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். அதைப்பின்பற்றி நகரப் பெரியார்கள் திரு. **கவி நயம் கந்தசாமி** முதலியார், திரு. **சாமிநாயுடு** முதலியவர்கள் பேசியபின் தமிழிசைக்கழகம் நிறுவப்பட்டு வினைக் குழுவினர் தேர்தலும் நடைபெற்றது. வினைக் குழுவினர் தேர்வுக் கூட்டத் திலேயே அறுநூறு வெண்பொற் காசுகள் கொடையாக வசூலிக் கப்பட்டன. திரு. சர். குமார ராஜா முத்தையா செட்டியா ரவர்களைக் கொண்டு இக் கழகத் திறப்பு விழா ஆற்றுவதென வும், தேவாரமணி இசையரசு திரு. தண்டபாணி தேசிகரவர்க ளைக் கொண்டு கழகத்தின் நன்மைக்காக ஓர் இசை விருந்து நடத்துவ தெனவும் முடிவு செய்யப் பெற்றது.

இங்ஙனம்,

P. பெரியசாமிப்பிள்ளை.

துணையமைச்சர்.



# மெய்கண்டார் நூல் மொழிபெயர்ப்பா ? தமிழ் முதல் நூலா ?

பேராசிரியர், திரு. S. சோமசுந்தரபாரதியார் அவர்கள், M. A. B. L., பசுமலை.

(முற்றொடர்ச்சி : துணர் ௰௬, மலர் ௭, பக்கம் 141)

இனி, இவ்வுண்மைக்கு மாறாக, தம் கூற்றுக் கிவர் சாற்றும் சான்று, தமிழ்ப் போதத்தின் சிறப்புப்பாயிரச் செய்யுளே யாகும். முதலில், சிறப்புப்பாயிரம் செய்தவர் யாவர் என்ப திதுவரை யாரும் தேராச் செய்தியாகும். யாவரேயாயினும், மெய் கண்டார்க் கதிற் பொறுப்பிலை என்பதொருதலை. ஒரு நூற்குச் சிறப்புப் பாயிரம் செய்தற்குரியவர், அந்நூற்புலவன் றன்னோடு கற்றோன், அவன்பாற்கற்ற நன்மாணுக்கன், தகு முறைகாரனென்றின்ன மூவகைத்தன்மையராவர். பனுவற் புலவன் பாயிரங்கூறல் நூல்மரபன்று ; ஆன்ற சான்றோர் வழக்குமில்லை. அன்றியும் பாயிரச் சொற்களை ஆய்ந்து பார்க் கினும், அவை சுட்டும் உண்மையும் அதுவே. "உயர் சிவஞான போதமுரைத்தோன், பெண்ணைப்புனல் சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன், பொய்கண்டகன்ற மெய்கண்ட தேவன்" எனப் படர்க்கையிற் பாயிரம் பேசுதலாலுமது தேற்றமாகும். இனி அவரொடு கற்றோர் யாருமிலரால், அவர்பாற் கற்ற மாணவர் யாருமப் பாயிரம் பகர்ந்ததாய்க் கேட்கிலமாதலால், இவ்வரும் பொருள் நூற்குரைதரும் பெரியாரெலாம் நூலொடு பாயிரம் சேர்த்துரைகூறி, அதைச் செய்தவர் யாரெனச் சுட்டாமை யினால், மூவகைத் தகவினர்யாவரும் பாயிரம் செய்திலரென்பது தெற்றென விளங்கும். ஆகவே, நூலை ஆக்கிய புலவரும், நூற்குப் பாயிரம் போக்கற் குரியருமல்லாத, தம் பெயர் சொல் லத் துணியாத ஒருவர் செய்து சேர்த்த பாயிரம், நூல் வரலாற் றை நுனித்தாய்ந்து நுவலச் சாலாது.

மேலும், சிறப்புப் பாயிரச் செய்யுளை நோக்கினும், மெய் கண்ட தேவர் பொய்விண்ட குறிப்புப் புலப்படவில்லை. அவர், நந்தி செய்ததைத்தமிழில் பெயர்த்துத் தந்தனரென்றேனும், செந்தமிழ் மொழியில் நந்தியார் செய்து வந்ததை வாங்கி வழங் கினரென்றேனும், சிறப்புப் பாயிரம் செப்பவுமில்லை. அது வருமாறு :—

"மலர்தலையுலகில் மாயிருள் தீரப்
பலர் புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல், ஈண்டிய
பெரும் பெயர்க் கடவுளிற் கண்டு
கண்ணிருடீர்ந்து, அருந்துயர்க் குரம்பையி னுன்மாநாடி,
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
உயர்சிவ ஞான போத முரைத்தோன்.
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேத வனன்
பொய்கண் டகன்ற மெய்கண்டதேவன்,
பவ நனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே"

சுவேதர் சொன்ன மெய்ந்நெறித்தமிழ்நூலை, அவர் மாணவருள் முதல்வரும் சகலாகம பண்டிதருமான அருணந்தியே "மெய் கண்ட நூல்" என்று விதந்து கூறினர். சகலாகம பண்டிதர், வடமொழிப் போதமோர் படலமாய்க் கொண்ட இரௌர வாகமம் கற்றில ரென்பது சற்று முண்மையா? கற்றிருந்தால், அவர் அவ்வாகமப் படல மொழிபெயர்ப்பாவதை மறந்தோ மறைத்தோ முதனூற் பெயரையும், உண்மையையுமழித்து, தமது குரவரே மெய்கண்டுரைத்ததாய்ப் பொய்யைத்துணிந்து புகன்ற னர் என்பதா? முதனூல் உண்மையை முழுது மறைத்து, தா மொழி பெயர்த்ததைத் தமதறிவாலே கண்டு தாமுரைத்த மெய் நூல் போல வழங்கினராயின், சுவேதவனப் பெருமாள் "பொய் கண்டகன்ற மெய்கண்டா" ராவதெப்படி? அவர் தமிழ் நூலின் உண்மை வரலாற்றை மெய்கண்டாரினும் அருணந்தி யாரினும் அதிகமாய் அறிந்து கூறுமாற்றல் பிந்திய பிறர் பெற்றவாறென்னை?

இனிப்பாயிரப் பொருளையே ஆய முயல்வோம். "காணு முறுப்பாய கண்ணும், எல்லொளியின்றி இருளில் பொருள்களைக் காண்கிலாதது போல், கெடு முடலுள்ளே நிலை யுயிர்ப் பரிசை, கடவுள் துணையின்றி உயிர்கள் தாமே உணர வொண்ணாது; இவ் விழுமிய சிவநெறி மெய்யறிவு, முன் நந்தி முனிவருக்குச் சொன்னது; அவ்வுண்மையைக் கடவுள் அருளாற் கண்டு தெளிந்து மக்களுக்குரைத்தான், சுவேதவனன் என்ற மெய் கண்ட தேவன்", என்பது பாயிரப் பொழிப்பு. இதில், நந்தி முனிவருக் களித்தது, ஒரு நூலென்ற குறிப்பில்லை. "சிவஞான போதம்" என்றால் சிவஞானமாகிய போதம். அதாவது மெய் அறிவு என்று பொருள். நந்தியாற் போதிக்கப்பட்டதும் அம் மெய்யறிவே. சுவேதவனர் கண்டுரைத்ததும் அவ்வுண்மையே.

(தொடரும்)

# கலைச்சொல்லாக்கம்

சேலம் கல்லூரித்தலைவர்,

திரு. அ. இராமசாமிக்கவுண்டர் M. A; L. T., அவர்கள்.

. (முற்றொடர்ச்சி: துணர் ௰௧, மலர் ௧, பக்கம் 172)

சோகூடிகள், க்ஷாரம், ஆஹாரசமீகரணம், யோகவாஹி, சஞ்சாயகி, வாஹகம், ஹரிதகி காமலம், அப்ஜ இரத்தகி காமலம் பாக்கிய ஜனக, அனிஷ்கர்ஷம், சங்கோஜயத்வம், பிரதிலோம, விபாஜியத்துவம், பிரதிமாகேந்திரம், அவிஞசத்வம், அவிபேத்யம், சமாந்திர சதுர் புஜம், அதிருசியரேகை, நிஷ்காசினி, வித்யுத் லதானிகம், வக்ரபாவித்வம், உஷக்காலம், ஆபாஸ பிம்பம், ஜ்யாமிதி, கிருஷித்தொழில்—விரிவஞ்சி இதனுடன் நிறுத்தினேன். எம்போன்ருர்க்கும் விளங்காத இச் சொற்கள் தமிழ் நாட்டு இளஞ்சிருர்களின்மீது திணிக்கப்பெற்றுல் அதன் விளைவினைக் கூறவும் வேண்டுமோ?

இந்நிலையில் 1941-ஆம் ஆண்டில் தமிழ்க்கலைச் சொல்லாக்க வினைக்குழுவென்று ஒரு குழுவினை அரசியலார் அமைத்தனர். அதற்கு ஆங்கிலப்பேராசிரியர் திரு. K. சாமிநாத அய்யர் தலைவராக விளங்கினுர். நானும் ஒரு உறுப்பினனுக இருந்தேன். பல கூட்டங்கள் நடைபெற்றன. ஆனுல் கலைச்சொற்கள் கூடுமானவரையிலும் தமிழாக இருக்கவேண்டும் என்னும் கொள்கை அந்த வினைக்குழுவிற்கு இல்லை. மற்றவர்களை என் வழித்திருப்ப முயன்றேன்; என்னைத் தம் வழித்திருப்ப அவர்கள் முயன்றனர். ஆனுல் எதுவும் முடியவில்லை. பெரும்பாலோர் கொள்கைக்கு இணங்கவே கலைச்சொற்களும் முடிவுபெற்றன. வட சொற்கள் மலிந்த அவை அரசியலாரின் ஒப்பத்தைப் பெற்றுவிடும் என்பது திண்ணம். வெள்ளம் வருமுன்னர் அணைகோலிவையார் பெருகிய பின் என் செயக்கூடும்? என்பதைத் தமிழ் மக்கள் உணர்ந்து ஆவன செய்ய இன்றே முனைவார்களாக.

ஒருநாள் வினைக்குழுவின் கூட்டத்தில் நானும் திரு. பிள்ளை அவர்களும் நிகழ்த்திய சொல்லாடல் பின்வருமாறு.

நான்—சாஸ்திரம் என்ற சொல்லைக் காட்டிலும் நூல் என்ற சொல்லே மிகப் பொருத்தமாக உள்ளது. ஆதலால்

நூல் என்ற சொல்லையே ஏற்றுக்கொள்ள உம்மை வேண்டுகிறேன்.

வை. பி—அரிய விஞ்ஞானக் கருத்துக்களைத் தொகுத்தும் விரித்தும், ஒழுங்குபடுத்திச் சிறந்தவகையில் கூறுவது சாஸ்திரம் எனப்படும். ஆனால், நூல் என்பது ஏதேனும் ஒன்றைப் பற்றி எழுதப்பட்ட ஒரு நூல் வடிவத்தைக் குறிப்பதாகும். ஆதலால், கணிதநூல் என்பதைக் காட்டினும் கணித சாஸ்திரம் என்பதே மிகப் பொருத்தமுடையது.

நான்—தாங்கள் கூறிய இவ்விலக்கணத்துக்கு ஆதாரம் உள்ளதோ?

வை. பி—ஆதாரம் ஒன்றும் இல்லை. யாமே இவ்வாறு வகுத்துக் கொண்டு அதன்படியே பிறவிடங்களிலும் கையாண்டு வருகிறோம்.

நான்—இது உமது சொந்தக் கற்பனையெனின் சாஸ்திரத்தின் இலக்கணத்தை நூலுக்கும், நூலின் இலக்கணத்தை சாஸ்திரத்துக்குமாக மாற்றி அமைத்துக்கொள்ளலாமே. நூல் என்ற சொல்லுக்குத் தாழ்ந்த பொருளும், சாஸ்திரம் என்ற சொற்கு உயர்ந்த பொருளும் கற்பிக்கப்படுவதன் நோக்கம் யாது?

வை. பி—அது உலக வழக்கு.

நான்—நூல் என்பதும் சாஸ்திரம் என்பதும் ஒரு பொருள் குறிக்கும் இரு சொற்களாகவே உலகில் வழங்கி வருகின்றன. வியாகரண சாஸ்திரம் என்பதும் இலக்கண நூல் என்பதும் ஒரே பொருளைக் குறிக்கின்றன. மேலும் சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் பதிப்பிக்கப்பட்ட (Tamil Lexicon) தமிழ் அகராதியில் நூல் என்ற சொல்லுக்கு "Systematic treatise, science; சாஸ்திரம்" என்று பொருள் குறிக்கப்பட்டுள்ளது. இதை ஏற்றுக்கொள்வதா அல்லது தங்களுடைய புதிய பொருளைக் கொள்வதா?

வை. பி—பல்கலைக் கழக அகராதியிலுள்ள பொருள் சரியன்று. அது விரைவினால் நேர்ந்த பிழையாகும்.

நான்—தொல்காப்பியத்தில் நூலுக்கு இலக்கணம் வகுக்கப் பட்டுள்ளது.

ஒத்த சூத்திரம் உரைப்பிற் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
யீரைங் குற்றமும் இன்றி நேரிதின்
முப்பத் திருவகை யுத்தியொடு புணரின்
நூலென மொழிப நுணங்குமொழிப் புலவர்

என்பது நூலின் இலக்கணமாயிருக்க உங்கள் விருப் பப்படி யெல்லாம் தமிழர் மரபுக்கு முரண்படப் பொருள் கொள்ளுதல் முறையல்லவே.

வை. பி—நூலும், சாஸ்திரமும் ஒருபொருள் குறிப்பனவாயின் சாஸ்திரம் என்ற சொல்லை நீங்கள் ஏன் ஆட்சேபிக்கி றீர்கள் ?

நான்—சாஸ்திரம் என்பது வடசொல். நூல் என்ற தூய தமிழ்ச் சொல்லிருக்க அதே பொருளுடைய பிற சொல்லைப் புகுத்துதல் நீதியன்று. மேலும், இது தமிழ்ச் சொல்லாக்க வினைக்குழுவேயன்றி வடசொல் லாக்க வினைக்குழுவல்ல என்பதை உங்கட்குப் பணி வுடன் நினைப்பூட்டுகிறேன்.

வை. பி—சாஸ்திரம் என்பதும் தமிழ்ச் சொல்லேயாகும். அது- தேவாரம் திருவாசகம் முதலிய சமய நூல்களில் ஆளப் பட்டுள்ளது. தமிழில் இரண்டறக் கலந்த சொல் லெல்லாம் தமிழ்ச் சொல் என்பதே எமது துணிபு.

நான்—உங்கள் கொள்கை எனக்கு வியப்பைத் தருகிறது. சாஸ்திரம் என்ற சொல் சமய நூல்களில் காணப்பட லாம். ஆனால், அதனாலேயே அது தமிழ்ச்சொல்லா காது. ஒரு சொல் தமிழ்ச் சொல்லா அல்லது ஆரியச் சொல்லா என அறிவதற்குப் பல முறைகளுண்டு. அவற்றுள் ஒன்றினாலாவது உங்களது கொள்கையை நிலைநாட்ட முடியாது.

வை. பி—அடிப்படையான கொள்கையிலேயே உமக்கும் எமக் கும் கருத்து வேற்றுமை யுண்டு. ஆதலால், விவாதத் தை நிறுத்திக் கொள்வோம். வினைக்குழுத் தலைவர்

(திரு. K. சாமிநாதன்) தமது விருப்பப்படியே தீர்ப்பு செய்து கொள்ளட்டும்.

நான்—அப்படியே ஆகட்டும். சாஸ்திரம் என்ற சொல்லே இவ் வினைக்குழுவினால் ஒப்புக்கொள்ளப்படும், என்பதை நான் அறிவேன். ஆனால் தமிழருக்கும் தமிழ் நாட்டுக்கும் நீங்கள் பெருந் தீங்கு விளைவிக்கிறீர்கள் என்பதையும், பிற்காலத்தில் தமிழர்கள் வீறிட்டெழுந்து சீறுவாராயின் அவர்களுக்கு அமைதிகூறும் பொறுப்பு உங்களுடையதாகும் என்பதையும் உங்கட்கு அறிவிக்கிறேன்.

கலைச்சொல் வினைக்குழுவின் மனப்பான்மையையும், அவரது அடிப்படையானகொள்கையினையும் அறிதற்கு இச்சொல்லாடல் ஒன்றே சாலும். உண்மையான கருத்துவேற்றுமைக்கு மரியாதை காட்டுதலே சான்றாண்மையாதலால் நமது பிள்ளையவர்களின் கொள்கையினையும், அக்கொள்கையால் தமிழ் நாடடையும் தீங்கினையும் அப்போதே அறிவிக்க நான் கருதவில்லை. ஆனால் அது ஒரு குற்றமாக முடிந்தது என்பதை இன்று நான் உணர்கிறேன். 'செய்தக்க செய்யாமையானும் கெடும்'. அன்றே நான் அதைச் செய்திருப்பின் நமது பிள்ளையவர்கள் உண்மைத் தமிழரை இன்று இழித்துரைக்க முன் வந்திருக்க மாட்டார். அவரே இவ்வழக்கினைத்தொடங்கி விட்டமையால் அதை மறுக்க வேண்டியது எனது கடமையென்றுணர்ந்து இதை எழுதலானேன். வடமொழியினின்றும் தமிழைக் காக்குமுன் உட்பகையுடைய தமிழரினின்றும் அதைக் காக்கக்கடமைப்பட்டுள்ளோம் என்பதைத் தமிழ் மக்களுக்குப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

---

**தமிழிசைச் சங்கம் சென்னை.**

23—1—44 காலை 10 மணிக்குச் சென்னை ஜார்ஜ டவுன் செம்புதீஸ் தெரு, 79, நெம்பர் தமிழ் இசைச் சங்க மண்டபத்தில் தமிழிசைக் கல்லூரி திறக்கப்பட்டது. கல்லூரியின் தலைவர் திரு. வித்துவான். கீவளூர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களும் சங்க கௌரவ காரியதரிசி திரு. ராவ் சாகிபு டி. எஸ். கச்சாபிகேச முதலியார் அவர்களும் தமிழ் இசை இயக்கத்தை ஆதரிக்கும் அன்பர்கள் பலரும் வந்திருந்தார்கள். கல்லூரியில் சேர விருப்பமுள்ள மாணவர்கள் ஆடவர் மகளிர் ஆகிய இருபாலரும் வந்திருந்தார்கள். திறப்பு விழா கலைமகள் வணக்கத்தோடு சிறப்பாகத் தொடங்கிற்று. மாணவர்கள் தகுதியை அறிவதற்காக ஓர் இசைத்தேர்வு நடத்தப்பட்டது.

இங்ஙனம், **K. கந்தசாமி,** துணையமைச்சர்.

# இலக்கியப் பெண்மணிகள்
## பதிபக்தி

*வித்துவான். சிவ. பார்வதியம்மையார் திருச்சி வானொலியில் நிகழ்த்திய சொற்பொழிவு.*

இலக்கியப் பெண்மணிகள் என்பதற்கு இலக்கியங்களை ஆக்கிய பெண்மணிகள் எனவும், இலக்கியங்களிற் பேசப்படும் பெண்மணிகள் என்வும் இருதிறமாகப் பொருள் கொள்ளலாம்.

பதிபத்தி என்பது மகளிர் கணவனிடத்து மாறு அன்புடையராய் அவனையே தெய்வமெனக் கொண்டு ஒழுகும் ஒழுகலாறாகும். கணவன் சொற்பிழையாது ஒழுகுதலின் அது கற்பெனவும் படும். மகளிர்க்கு உயிரினும் நாண் சிறந்தது எனவும், அதனினும் கற்புச் சிறந்தது எனவும் தொல்காப்பியர் கூறுவர். மற்றும் அவர், 'செறிவும் நிறையும் செம்மையும் செப்பும், அறிவும் அருமையும் பெண்பா லான' என்று வேறு சிறந்த குணங்கள் சிலவற்றையும் எடுத்தோதியுள்ளார். அதனால் கற்புடை மகளிர் எல்லா நற்குணங்களும் உடையராவரென்பது பெறப்படும்.

'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை'

எனத் திருவள்ளுவரும்,

'வானம் பொய்யாது வளம் பிழைப்பறியாது
நீணில வேந்தன் கொற்றஞ் சிதையாது,
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு'

என இளங்கோவடிகளும் கூறுவன கற்பின் சிறப்பை நன்கு விளக்குதல் காண்க. கல்வியிற் பெரியராய கம்பர், திருமால் வாமனனாகவிருந்து தவம் புரிந்த பொழிலின் தூய்மையை,

'தங்கணா யகரிற் றெய்வம் தவம்பிறி திலவென் றெண்ணும்,
மங்கைமார் சிந்தைபோலத் தூயது'

என உவமை கூறி விளக்கியிருப்பது கற்புடைய மங்கையரின் மனத்தூய்மையின் சீர்மையை நனி புலப்படுத்துவதாகும். மற்றும், கற்புடைய மாதர் எத்தகைய இடையூற்றிற்கும் கலங்காது

அதனை வெல்லும் மனத்திண்மையுடையரென்பதும், செய்தற் கரியவற்றையும் செய்துமுடிக்கும் ஆற்றலுடையரென்பதும் பல வரலாறுகளால் அறியப்படுவனவாம்.

நம் தமிழிலக்கியங்களாகிய சங்கச் செய்யுட்களிலும், பெருங் காப்பியங்களிலும், திருமுறைகளிலும் பேசப்படுகின்ற பதிபத்தி யென்னும் கற்பு வாய்ந்த பெண்மணிகள் எத்தனையோ பலராவர். அவர்களுள்ளே சங்ககாலத்தில் செந்தமிழ்ப் புலமையிலும் சிறந்து விளங்கிய ஆதிமந்தியார், வெள்ளிவீதியார், பூதப் பாண்டியன் தேவியார் என்போருடைய வரலாறுகளும், பெருங் காப்பியங்களிலும், திருமுறைகளிலும் பாராட்டப்பெறும் கண்ணகி, சீதை, திலகவதியார், புனிதவதியார் என்போருடைய வரலாறுகளும் பதிபத்திக்கு எடுத்துக்காட்டாக இப்பொழுது சுருக்கமாகக் கூறப்படும். ஆதிமந்தியார் சோழன் கரிகாற் பெருவளத்தான் என்னும் பெருவேந்தன் புதல்வியார்; வஞ்சி மன்னனாகிய ஆட்டன் அத்தியென்பானை மணந்தவர். ஆடுதலில் வல்லனாதலால் ஆட்டன் என்னும் சிறப்புப்பெயர் பெற்ற அத்தி யென்பானும், அவனுடைய கற்பிற்சிறந்த காதலியாகிய ஆதி மந்தியாரும் கழார் என்னுமிடத்தில் கரிகாலனும் ஏனைய உற வினரும் காணுமாறு நீர்விளையாட்டணி நிகழ்த்தியபொழுது, காவிரிநங்கை அத்தி ஆடுகின்ற அழகினை விரும்பி அவனையீர்த் துச் சென்றனள். அதுகண்ட ஆதிமந்தியார் மிகவும் பேதுற்றுக் கலங்கிக் காதலனை அழைத்துக்கொண்டல்லது மீளேனென்று காவிரிவழியே சென்று கடலை அடைந்தனர். அப்பொழுது அவரது அளவற்ற கற்பின் வலியால் கடலும் அவர் கணவனைக் கொணர்ந்து முன்னிறுத்தியது. அம்மையார் தம் இன்னுயிர்த் தலைவனுடன் இனிது மீண்டனர். என்னே இவர்தம் பதிபத்தி. இஃது ஒரு கட்டுக்கதையல்ல; அகச்சான்று புறச்சான்று களுடன் விளங்கும் உண்மைவரலாறு.

> 'மள்ளர் குழீஇய விழவி னானும், மகளிர் தழீஇய [துணங்கையானும்
> யாண்டுங் காணேன் மாண்டக் கோனை'

என்று இவர் பாடிய குறுந்தொகைச் செய்யுளாலும், வெள்ளி வீதியார்,

> 'காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்து
> ஆதிமந்தி போலப் பேதுற்று'

என்று அகப்பாட்டிற் கூறுதலாலும் இவர் காதலனைக் காணமற் போகவிட்டு வருந்தினமை புலனாம். நல்லிசைப் புலவராய பரணர்,

'கழார்ப் பெருந்துறை விழவி னாடும்
ஈட்டெழிற் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்
ஆட்டனத்தி நலனயந் துரைஇத்,
தாழிருங் கதுப்பிற் காவிரி வவ்வலின்
மாதிரந் துழைஇ மதிமருண் டிடருழந்த
ஆதிமந்தி காதலற் காட்டி'

என்று அகம் 222-ஆம் செய்யுளிற் கூறியிருப்பதும், இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில்,

'மன்னன் கரிகால் வளவன் மகள் வஞ்சிக்கோன்
தன்னைப் புனல்கொள்ளத் தான்புனலின்பின்சென்று
கன்னவில் தோளாயோ வென்னக் கடல்வந்து
முன்னிறுத்திக் காட்ட அவனைத்தழீஇக் கொண்டு
பொன்னங் கொடிபோலப் போதந்தாள்'

என்றுரைத்திருப்பதும் இவ்வரலாற்றை நன்கு விளக்குதல் காண்க.

இனி, வெள்ளிவீதியாரும் இவரைப்போலவே அரசகுடும்பத்திற் பிறந்து தம் ஆருயிர்க் காதலனையிழந்து அலமந்து கற்புக்கடன் ஆற்றியவராதல் வேண்டும். இதனை இவரே 45-ஆம் அகப்பாட்டில்,

'யானே, காதலற்கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்து,
ஆதிமந்திபோலப் பேதுற்று, அலந்தனென் உழல்வென் [கொல்லோ'

என்று தம் வரலாற்றை ஆதிமந்தியார் வரலாற்றுடன் ஒப்பிட்டுக் கூறியிருப்பதனாலும், நல்லிசைப்புலமை மெல்லியலாராகிய ஔவையார் அகம் 147-ஆம் செய்யுளில்,

'நெறிபடு கவலை நிரம்பாநீளிடை,
வெள்ளிவீதியைப்போல நன்றுஞ் செலவயர்ந்திசினால்'

என்று உரைத்திருப்பதனாலும் அறியலாகும். இவரும் ஆதிமந்தியார்போலவே கணவனை இழந்து வருந்திக் கற்பின் வலியால் மீளப்பெற்றவர்போலும்.

இனி, ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு என்பவர் தம் கணவனைப்போலவே நல்லிசைப் புலமை வாய்ந்தவர். இருவர்க்கும் உயிர் ஒன்று, உளமும் ஒன்று என்னுமாறு தணவாக்காதலுடன் வாழ்ந்தவர். செந்தமிழ்ப்புலமை சான்ற இவரது கணவன், 'என்னொடு போர்புரிவோமென்று கூறும் மாற்றலரைப் போரில் புறங்கொடுத்தோடுமாறு செய்யேனாகில் இன்னன் ஆகுவேன்'

என வஞ்சினங்கூறுமிடத்து, முதற்கண்,

'சிறந்த பேரமருண்கண் இவளினும் பிரிக'

என்று மொழிவதால் இவரிடம் எத்தகைய அன்பு கொண்டிருந் தனன் என்பது தெளிவாம். இன்னணம் அறிவுந்திருவும் அன் பும் ஒத்திலங்கிய மன்னவனும் மாதேவியும் மகிழ்ந்துறையும் நாளில் மன்னவன் தன் புகழுடம்பை நிறீஇப் பூதவுடம்பை விட்டனன். அவ்வளவில் பெருந்தேவியார் கணவனையிழந்து கைமை நோன்பு நோற்று வாழ ஒருப்படாது தம் உயிரை அவருயிருடன் இசைவிக்கத் துணிந்தார். அப்பொழுது சான் றோர் பலர்கூடி அவரைத்தடுத்தனர்.
உடனே அம்மையார்,

'செல்கெனச் சொல்லாது ஒழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே'

என விளித்து, கைமை நோன்பின் வருத்தத்தினை எடுத்துரைத்து, அவ்வாறு உயிர்வாழும் உயவற்பெண்டிரல்லேம்; இடுகாட்டில் அமைத்த அஞ்சத்தக்க அழலானது நும்போல்வார்க்கு அடை தற்கு அரிதாகுக; எமக்கு எம்பெருந்தோட்கணவன் மாய்ந்த பின்னர், முகையின்றி அழகுடன் மலர்ந்த தாமரைப் பொய்கை யும், ஈமத்தீயும் ஒருதன்மையன; என்று ஓர் அழகிய செய்யுளாற் கூறித் தீயுட்குதித்தார். இவர் தீப்பாய்தற்குச் செல்லும் பொழுது கண்ட புலவரொருவர்,

'நீர்வார் கூந்த லிரும்புறந் தாழப், பேரஞர்க் கண்ணள்
பெருங்காடு நோக்கித், தெருமரும் அம்ம, தானே
தன் கொழுநன், முழவுக்கண் டுயிலாக் கடியுடை வியனகர்ச்,
சிறுநனி தமிய ளாயினும், இன்னுயிர் நடுங்குந்தன்
இளமை புறங்கொடுத்தே'

என்று 247-ஆம் புறப்பாட்டிற் கூறியிருப்பது கன்மனத்தையும் உருக்குந்தகவுடையதாம். இனி, சேரமுனிவராகிய இளங் கோவடிகளால் இயற்றப்பெற்ற முத்தமிழ்க்காப்பியமாகிய சிலப்பதிகாரம், அக்காப்பியத்தலைவியாக விளங்கிய கண்ணகி தேவியின் கற்பின் திறத்தினை விரித்துரைக்கின்றது. புகார் நகரில் பெருங்குடி வணிகர்மரபில் தோன்றி வடமீனனைய கற் புடையளாய் வயங்கிய கண்ணகி செவ்வேளனைய எழிலும் ஆற்றலும் உடைய கோவலனை மணந்து உத்தர குருவெனும் போகபூமியில் உதித்தாள்போல இன்புற்று இல்லறம் நடத்தி னள். இருவரும் ஊழ்வினை வயத்தால் மதுரைமாநகர் சென்றனர். அம்மதுரையில் சிலம்பு திருடிய பொற்கொல்ல னொருவன் சூழ்ச்சியாற் கோவலன் கொலையுண்டனன். கண வற்குற்ற கடுந்துயர் கேட்ட நங்கை உயிர்பதைத்து உளம் நடுங்கி,

'இன்புறு தங்கணவர் இடரெரி யகமூழ்கத்
துன்புறு வனநோற்றுத் துயருறு மகளிரைப்போல்
மன்பதை யலர்தூற்ற, மன்னவன் தவறிழைப்ப
அன்பனையிழந்தேன் யான் அவலங்கொண்டழிவலோ'

எனப்புலம்பி, சூரியனை நோக்கி, 'என்கணவன் கள்வனே' என வினவி, அவன் வாயால் அனைவர்க்கும் அதனைப்புலப்படுத்தி, பின் அந்நகர்ப்பத்தினிப் பெண்டிரைக் கூவியழைத்து 'யானும் ஓர் பத்தினியாகில் இறந்துகிடக்கும் எனது தலைவன்வாயால் ஒரு மொழியேனும் கேட்பேன்' என வஞ்சினங்கூறிச் சென்று அனைவருங்காணுமாறு குருதிசோரக் கிடந்த கோவலன் வாயிற் சொல் கேட்டனள். பின்னர், கண்ணகி அரசவை எய்தி, தன் காற்சிலம்பின்மணியரியை உடைத்துக்காட்டி, அரசன் தவற்றினை எடுத்துரைத்து, கோப்பெருந்தேவிபால் தான் பிறந்த பதியின் பெருமைகூறி, 'யானுமோர் பத்தினியாகில் அரசுடன் நகரையு மழிப்பேன்' என எழுந்து அப்பதியைத் தீக்கிரையாக்கி, வையையின் கரைவழியே சென்று, நெடுவேள் குன்றத்தில் வேங்கைமர நிழலில் பதினான்காம் நாள் தேவர்குழாத்துடன் வானவர் வடிவிற்போந்த காதலனுடன் வானவூர்தியில் உம்பருலகு சென்றனள். அதனைக்கேள்வியுற்ற செங்குட்டுவன் என்னும் சேரர் பெருமான் இமயத்தினின்று கற்கொணர்ந்து கண்ணகிக்குக் கோட்டமெடுத்து விழா நடத்தினன். இவ்வாற்றால் பத்தினியாகிய கண்ணகியின் உயர்ந்த பண்புகளும் அவளது மறக் கற்பின் மாண்பும் தெய்வத்தன்மையும் புலனாதல் காண்க. இனி, சீறிய கற்புடைய கண்ணகிதேவிபோல் ஆறிய கற்புக்கு எடுத்துக் காட்டாக விளங்குபவள் சீதாபிராட்டியாவள். இராமாயணமானது பிராட்டியின் ஏற்றங்கூறவே எழுந்தது என்பர். ஜனகமன்னன் புதல்வியாய், மன்னர் மன்னனாய தயரதனுக்கு மருகியாய சீதை தன் ஆருயிர்க்காதலனாகிய இராமபிரான் வனஞ்சென்றபோது தானும் உடன் சென்று துன்பங்களைப் பொறுத்ததும், அதன்மேல், அரக்கர் வேந்தனாகிய இராவணன் தன்னை வஞ்சத்தாற் கவர்ந்து சென்று கடல்நாப்பணுள்ள இலங்கையில் சிறைவைத்து இன்னலிழைத்தகாலையும் அக் கொடுந்துன்பங்களையெல்லாம் பொறுத்துத் தன் கற்பினைப் பாதுகாத்தவியல்பும் நெஞ்சை உருக்குந்தன்மையன.

பொற்பிறங்க லிலங்கை பொருந்தலர்
எற்பு மால்வரை யாகிலதே யெனில்
இற்பிறப்பும் ஒழுக்கும் இழுக்கமில்
கற்பும் யான்பிறர்க் கெங்ஙனம் காட்டுகேன்.

அல்லல் மாக்கள் இலங்கையதாகுமோ
எல்லேநீத்த உலகங்கள் யாவுமென்
சொல்லினுற் சுடுவேன் அது தூயவன்
வில்லினுற்றற்கு மாசென்று வீசினேன்.

என அனுமனை நோக்கிக் கூறுவன பிராட்டியின் பெருமித உணர்ச்சியையும், பேராற்றலையும் அறக்கற்பின் திறத்தையும் நன்கு விளக்குதல் காண்க.

'இலங்கை வெற்பில். இற்பிறப்பென்பதொன்றும்
இரும்பொறையென்பதொன்றும், கற்பெனும்
பெயரதொன்றும், களிநடம் புரியக்கண்டேன்'

என இராமன்பால் அனுமன் கூறுவதும் அறிந்து மகிழற்குரியது.

திருநாவுக்கரசராகும் மருணீக்கியாருக்குமுன் பிறந்த திலகவதியார், கலிப்பகையார் என்பவர் போரில் உயிர்துறந்தமையறிந்தவுடன், தம் பெற்ருேர் அவருக்குத்தம்மை மணஞ் செய்விக்க இசைந்திருந்தமையால் அவரைக்கணவராகவே கருதித் தாமும் உயிர்நீப்பத் துணிந்ததும், பின்பு தம்பியாராகிய மருணீக்கியார் உயிர்வாழவேண்டும் என்னும் இரக்கத்தால் உயிர் தாங்கித் தவநெறியை மேற்கொண்டிருந்ததும் அவரது சிறந்த கற்பின் பெருமையைப் புலப்படுத்துவன.

காரைக்காலில் வணிகர் குலத்துதித்துத் தனதத்தன் என்பானுக்கு வாழ்க்கையுற்ற புனிதவதியார் தாம் சிவனருள் கூடப்பெற்ற பெருமையராயும், கணவன்வழி அமைந்து ஒழுகினமையும், தம் பெருமையை அறிந்து கணவன் விலகியபின் தம் உடம்பின் தசைகளை உதறிப் பேயுருவாயதும் அவரது கற்புநெறி கடவா மாண்பினைப் புலப்படுத்துவன. அற்புதத் திருவந்தாதி முதலிய அருணூல்களையியற்றியவரும், சிவபிராணுல், 'அம்மையே' என அழைக்கப்பெற்றவருமாகிய அவருடைய பெருமையை யாரால் அளவிட்டுரைக்கலாகும்.

---

### மதிப்புரை—எழுச்சிமலர்.

சென்னையினின்றும் வெளியிடப்பெறும் திங்கள் வெளியீடாகிய எழுச்சிமலரின் முதன்மலர் கிடைக்கப்பெற்ருேம். எழுச்சிமலர் பெயருக்கேற்ப எழுச்சிதரும் உரைகளையும், எழிலுறுதலைப்புக்களையும், எழில்தழைவுறு முன்னேட்டினையும் பெற்றுப்படிப்பதற்கெழுச்சியினை யுண்டாக்குகின்றது. இம் மலரின் ஆசிரியர் திரு. பாண்டியன் அவர்கள். நல்ல தமிழ்ப் பற்றும், தம்முணர்ச்சியும் தமிழ் நாட்டில் இம் மலரால் தழைவுற வேண்டுமெனின் தமிழர் எழுச்சி மலரை ஒருமுகமாக ஆதரித்தருள வேண்டுகின்ருேம். எழுச்சிமலர் கிடைக்குமிடம்—33-A சாந்தோம் ஐரோடு, மைலாப்பூர், சென்னே.



# சர். ஆர். கே. சண்முகம்செட்டியார் அவர்கள்

*அண்ணுமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்.*

(முற்ருெடர்ச்சி: துணர் ௧௪, மலர் ௯, பக்கம் 190)

ஒரு சிறந்த தமிழரால் நாட்டில் நிறுவப்பெற்ற ஒரு பல்கலைக் கழகம், தமிழ்க் கலைக்கு உறைவிடமாக இருக்க வேண்டுமென்று நான் கருதினல் அது தவருகுமா? இன்று பட்டம் பெறுபவர்களுக்கு என்தாய் மொழியிலேயே சொற்பொழிவாற்ற இடந்தரும்படியான முறையில், இப்பல்கலைக் கழகம் வளர்ச்சி பெற்றிருக்கவேண்டுமென்று நான் விரும்புகின்றேன்.

என் வாழ்க்கை நிகழ்ச்சிகளைச் சிறிது சொல்கிறேன். தமிழ் இலக்கியத்தையும், தமிழர் வரலாற்றையும், சிறிதும் அறியாமலே, பல்கலைக் கழகத்தில் யான் பட்டம் பெற்றேன். உண்மையில் இவற்றின் மீது அப்போது மிகுந்த வெறுப்புக்கூட எனக்கு இருந்தது. நான் ஆங்கில இலக்கியத்திலும், ஐரோப்பியர் கலை வரலாற்றிலும், மிகுந்த தேர்ச்சியுற்றிருந்தேன். ஆங்கிலோ, சாக்சன், காதிக்கு ஆகிய மொழிகளையுங்கூட நான் அறிந்திருந்தேன். ‘பிசப்பு உல்பிலாசு’ என்பவர் காதிக்கு மொழியில் எழுதிய விவிலிய நூலின் மொழிபெயர்ப்பைப் படித்திருந்தேன். ஆனல் வள்ளுவர் வரைந்த குறளைப் படிக்கவில்லை. ஆங்கிலத்தில் “சாசரை” நன்ருக அறிந்திருந்தேன். ஆனல் இளங்கோவடிகளை அறியேன். கல்லூரியை விட்ட பிறகும் தமிழல்லாத வேறு மொழி நூற்களையே பயின்று வந்தேன்,

இளமைப் பருவத்தில் நான் இவ்வாறு கற்றதையே பெருமையாக எண்ணினேன். ஆனல் பின்னர்தான் என் இல்லத்திலேயே நான் வேற்ருளாக இருப்பதை யுணர்ந்தேன். என் உற்ருர், உறவினருடைய எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் என்ஞல் உணர்ந்து கொள்ள முடியவில்லை. நான் “இலண்டனிலும்” “மான்செஸ்டரிலும்” ஆங்கிலத்தில் சொற்பொழி வாற்றிய பொழுது ஆங்கில மக்களால் கைதட்டல்களுக் கிடையே பாராட்டப் பெற்றேன். ஆனல் முதல் முறை ஒரு சிற்றூரில் தமிழில் பேச நேரிட்ட பொழுது எனக்கு நடுக்கம் ஏற்பட்டது. சொற்களுக்காகத் தடுமாறினேன். என் பேச்சு நன்ருக இல்லை. நான் இந்தக் குறைபாட்டை யுணர்ந்து சிறிது சிறிதாகத் தமிழில்

பேசுவதில் முன்னேறி வருகின்றேன். சில ஆண்டுகளுக்கு முன்னர்தான் தமிழ்க் காவியங்களைப் படிக்க ஆரம்பித்தேன். அவைகள் உலகில் அழியாப் புகழ்பெற்ற பெருநூல்களோடு ஒப்பப் பாராட்டத் தக்கன என்பதை உணர்கிறேன். நம் நாட்டிலுள்ள இந்தச் சிறந்த செல்வத்தைப் புறக்கணித்ததற்காக, இப்போது வருத்தப் படுகிறேன். பல்கலைக் கழகக் கல்வியால் பயன் பெற்ற நீங்கள் உங்கள் தாய்மொழியையும். அதன் இலக்கியத்தையும் கசடறக் கற்றுப் பின் அதனை வளம்படுத்தி, அதன் முன்னேற்றத்திற்காவன செய்வீர்களாக.

நம் இந்தியநாட்டில் சிறிது காலமாகத் தாய்மொழிப் பயிற்சியின் மறுமலர்ச்சியும், பலதிறப்பட்ட மொழிகளின் கலைவளர்ச்சியும் தோன்றியிருக்கின்றன. இது இந்திய நாட்டின் ஒற்றுமையைக் குறைக்குமென்று நான் கருதவில்லை. இவ்வாறு எண்ணுபவர்கள் இந்திய நாட்டின் பகைவர்களேயாவார்கள். இந்தியக் கலைகளும், இந்திய நாடும், பலதிறப்பட்ட கலைகளையும், பழைமையையும், கொண்ட பல பிரிவினைகளையுடையன என்பதை அவர்கள் மறந்து விடுகிறார்கள். நம் நாட்டில், வெறுப்பும், பகையும் குடிகொண்டிருப்பது இரங்கத் தக்கதே. நம்மில், மிக வன்மையுடைய ஒரு கூட்டத்தார், தங்கள் கருத்துக்களையும், கலைகளையும் இந்திய நாட்டார் எல்லோரிடத்திலும் வற்புறுத்த முயற்சிப்பதே இதற்குக் காரணமாகும். அவர்கள் நாட்டுப் பற்று என்ற பேரால் எல்லோரையும் ஒழித்துத் தங்கள் வலிமையையும், செல்வாக்கையும், நிலைநிறுத்தப் பார்க்கிறார்கள்.

ஒவ்வொரு நாட்டிலும் அந்நாட்டை ஆண்டுவந்த வகுப்பாரை ஒழித்து, அங்கு குடியாட்சி நிறுவப் பெற்றிருக்கின்றது. இந்தியாவில் சாதிவேறுபாடு, ஆட்சி செய்யும் வகுப்பினரின் அதிகாரத்தையும், தனி உரிமையையும், உருவாக்கி நிலைநாட்டியிருக்கின்றது. பிறநாட்டினரான ஆட்சியாளரின் வாக்குறுதிகளாலும், நல்லெண்ணத்தினாலும் நம் நாடு விடுதலை பெற முடியாது. ஆனால், நம்மில் அதிகாரமும், செல்வாக்குமுடைய வகுப்பார் தங்கள் பேராசையையும், தனி உரிமையையும் விட்டு விட வேண்டும். அல்லது குடியாட்சியின் கொள்கைகள் இவர்களைத் தாக்க வேண்டும். இவற்றுள் ஒன்று எவ்வளவு விரைவாக நடைபெறுகின்றதோ அவ்வளவு விரைவில்தான் நம்நாடு விடுதலை பெறும்.

ஆத்துக்குடி சைவசித்தாந்த சபையின் மணிவிழாவில் தலைமை தாங்கிய மகாமகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியாரவர்கள் நிகழ்த்திய

# முன்னுரைச் சுருக்கம்

அன்புமிக்க ஐயன்மீர், அன்னைமீர்,

இத்திருமந்திர நகரில் தோன்றிய இச்சைவ சித்தாந்த சபையே தமிழ் நாட்டில் சமய சம்பந்தமாக நிறுவப்பட்ட கழகங்களுள் காலத்தால் முற்பட்டது. இதனைத் தோற்றுவித்தவர்களின் தூயஉள்ளமே இத்துணையாண்டு இச்சபை செழித்து வளர்தற்குக் காரணமாகும். நன்னிலத்திட்டவித்தாக இச்சைவப்பைங்கூழ் தோன்றிய பின்னர் இதனைப்பாதுகாக்கும் அன்பர்களுடைய பொருண்மாரியாலும், அறிவுரத்தானும் இஃது ஆக்கம் பெற்று நற்பயன் விளைத்து வருகின்றது.

யான் இச்சபையில் பல ஆண்டுகளுக்கு முன்னர்ச் சொற்பொழிவாளனாக வந்து கடமை புரிந்ததும், இதன் ஐம்பதாம் ஆண்டு நிறைவுப் பொன் விழாவில் நீங்களிட்ட ஆணைப்படி தலைவனாக இருந்து இயன்ற பணியைச் செய்ததும் மறந்திருக்க மாட்டீர்கள். அத்தொடர்பு காரணமாகவே உங்கள் உள்ளத்தில் எழுந்த அன்பினால் இம்மணிவிழாவிலும் தலைமைப் பேறளிக்க முற்பட்டீர்கள். இச்சபையின் பொன்னுக்கும் மணிக்கும் என்னை உரிமையாக்கிக்கொண்ட உங்கள் நன்றியை என்றும் மறவேன்.

மக்களுக்கு மொழியறிவும் சமயவொழுக்கமும் இரண்டு கண்கள்போல் இன்றியமையாதன. மொழிப்பயிற்சியால் அறிவும், சமயவுணர்ச்சியால் ஒழுக்கமும் உண்டாமென்பது பெரியோர் கண்டது. இவ்விரண்டினுள்ளும் முன்னது கருவியும் பின்னது பயனுமாம் என்ப. மொழியறிவை உடலுறுப்புக்களுட் சிறந்த கண்போல்வதெனக் குறிப்பிட்ட திருவள்ளுவர், ஒழுக்கத்திற்குச்சிறந்த உவமைகாண நெடிது சூழ்ந்து கண்ணிற் சிறந்த உறுப்பில்லை யாதலால் உறுப்புக்களை விட்டு அவ்வுறுப்புக்களோடுகூடிய உடலையியக்கும் உயிரையே உவமனாகக் கொண்டு 'ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் என்றார். ஆகவே மொழியறிவிலும் அதன் பயனாகிய ஒழுக்கம் சிறந்ததென்பது புலனாம்.

அவ்வொழுக்கம் மக்கள் வாழ்க்கையிற் சமய நெறியோடு மிகவும் தொடர்புடையதென்பது பெரியோர் மொழியாலும் அநுபவத்தாலும் கண்ட உண்மை. ஒரு சிலர் சமயத்தொடர்பின்றி ஒழுக்கம் நிலைபெறுமெனவும், அறிவாற்றலால் வரையறுக்கப்பட்டு மேற்கொள்ளத்தக்க ஒழுக்கத்திற்குச் சமயச்சார்பு வேண்டியதில்லையெனவும் கூறுவர். அங்ஙனம் கொள்ளின், ஒழுக்கத்தின் இழுக்கினுர்க்கு யார் தண்டனை விதிப்பதென்னும் வினு நிகழுங்கால் அதற்கு விடை, சமயப்பகுதியிலிருந்தே கொடுக்க வேண்டியதாக நேரும். உலகியலில் நெறிமுறையிற் பிறழ்ந்தாரை ஒறுத்தடக்குதற்கு அரசனும் அரசியலும் இருத்தல் போலச் சமய நெறியில் ஒழுக்கத்தில் வழுவினுரை ஒறுத்து நன்னெறிப் படுத்தற்குக் கடவுளும் கடவுட் கொள்கையாகிய சமயமும் வேண்டும் என்பது விளக்கமாம்.

இனி, பல்வேறு வகையாக விரிந்து கிடக்கின்ற சமயங்களுள் எதனை மெய்ச் சமயமாகக் கொண்டு மேற்கொள்ளலாமென்பது ஆராயற் பாலது. அவ்வாராய்ச்சியில் தலைப்படுங்கால், உடம்புடைய மக்களுக்கு இவ்வுடம்பு வந்தவாறும், இதற்கும் உயிர்க்கும் உள்ள இயைபும், அறிவுடைப் பொருளாகிய உயிர் சடப்பொருளை விரும்புதற்கு ஏதுவும், இவ்வுடலோடு கூடிய வாழ்க்கையினின்றும் அறியப்படும் இன்பதுன்ப உணர்ச்சிகளுக்குக் காரணமும் ஆகிய இன்னோரன்ன தெரிந்து துணியற் பாலனவாம். இந்நிலையில் இவ்வுடல் தோன்றுதற்கு மூலமாகச் சடவடிவாகவுள்ள மாயையாகிய வித்துண்டென்பதும், அதன் காரியமே உடல் கரணம் முதலிய எல்லாம் என்பதும் புலனும். மாயாகாரியமாகிய உடலுடன் கூடிய வாழ்க்கையில் நிகழும் இன்பதுன்பங்களுக்கு ஏதுவாகவும் ஒன்றிருக்கவேண்டுமென்பது அறிவுக்கு ஒத்ததாகும். ஏனெனில் ஒரே செயலில் முற்பட்டு முயலும் மக்கள் பலர்க்கும் அச்செயற்பயன் ஒன்ருக இல்லாமல் பற்பல வகையாக அநுபவத்திற்கு வருகின்றதாகலின் வாழ்க்கையில் நிகழும் அவ்வின்பதுன்பங்களுக்குக் காரணமாகவுள்ளன அவரவர் முன்னர்ச் செய்த நல்லனவுந் தீயனவுமாகிய செயல்களே யென்பது தெளிவாம். அச்செயற் பயன்களையனுபவிப்பதற்கே மாயாமூலத்தினின்றும் இறைவனருளால் உடல் கிடைத்ததென்ப. இங்ஙனம் போதரும் தெளிவையடைந்து இத்துன்பத் தொடர்பினின்றும் விடுதலை பெறுதற்கு உயிர் விரும்புவது இயல்பே. இவ்விருப்பத்தை நிறைவேற்றுதற்கு இத்தொடர்பு யாதும் இன்றி எல்லா ஆற்றலும் நிரம்பிய கடவுட் பொருள் ஒன்று இருக்கவேண்டுமென்பது தெளிவாகும். அக் கடவுள் என்றும் உள்ளதாகவும் இன்பவடிவினதாகவும் எல்லாவற்றையும் ஆக்கவும் காக்கவும் அழிக்கவும் வல்லதாகவும்

முற்றுணர்வு முதலிய உயர் குணங்களுடையதாகவும் இருந்தாலொழியச் சிற்றுயிர்களாகிய நம்மனோர்க்கு நலஞ் செய்ய இயலாதென்பது போதரும். ஆகவே இத்தகைய ஆராய்ச்சிகளால் முடிவாகத்துணியப்பட்ட பொருள் இறை, உயிர், கட்டு என முத்திறப்படும் என்பது தெளிவாம். உயிரையே கடவுள் என்பாரும், கரண முதலியவற்றை முதற் பொருளென்பாருமாகப் பல திறப்பட்டு மயங்கும் மக்களுக்கு மிக விளக்கமாக முத்திறப் பொருள்களையும் வெளிப்படுத்துவது நமக்குரிய சைவ சமய நெறியேயாகும். இச்சமயம் பரந்தநோக்கமும வேற்றுச் சமயங்களை வெறுத்தொதுக்காமல் படிமுறையில் ஏற்றுக் கொள்ளும் இயல்பும் உடையது.

இந்நெறியில் எத்தகைய ஐயப்பாடுமின்றிப் பொருட்டெளிவடைதல் கூடும். மாயையைப் பிறரெல்லாம் இழிந்ததெனக் கொள்வர். அதனுதவியை நினைந்து 'மாயாதனுவிளக்காம்' என்று சைவங்கூறும். மக்களுடைய பரிபாக நிலைகள் பல திறப்படும். அவற்றிற்கேற்பச் சமயநெறி வகுக்கப்பட்டிருத்தல் வேண்டும். இம்முறையில் சரியை கிரியை யோகம் ஞானம் என்பன சைவத்திற் சிறந்த படிகளாகவுள்ளன. கன்ம நாசத்தில் உயிரெய்துஞ் சிவானந்தம் மாற்றமனங்கழிய நின்றதாயினும் அதற்கு வாயிலாகவுள்ள சாதனங்களெல்லாம் சைவத்தில் மிக விளக்கமாகவுள்ளன. சைவ சமயத்தின் உண்மைகளைத்தேவார திருவாசக முதலிய பாசுரங்களும் மெய்கண்ட சித்தாந்தமாகிய சிவஞானபோத முதலிய நூல்களும் ஐயமறத் தெளிவிப்பனவாம். உலகில் நீதியை வரையறுத்துணர்த்துவதில் திருக்குறள் எத்துணைச் சிறந்ததோ அத்துணைச் சிறப்புடையது சைவ நெறியை விளக்குவதிற் சிவஞானபோதம். சூத்திர இலக்கண முற்றும் பொருந்தியது அது. அதனைத் தலைமணியாகக்கொண்ட சிவஞான சித்தி முதலிய மெய்ந்நூல்கள் எல்லாம் நம்பெரியார் நமக்குதவிய மூலப்பொருள்களாம். சைவவுண்மையை அநுபவத்திற்கண்ட திருமூலர் பட்டினத்தடிகள் முதலிய சிவஞானச் செல்வர்கள் நமக்குச் செய்த உதவி மிகப்பெரிதாகும். கேட்பாருள்ளத்தைத் தன்வயப்படுத்துச் சிவானந்தக் கடலுள் திளைக்கச் செய்வது திருவாசக அருட்பாசுரங்களென்பதை யார் மறுக்க முடியும்? இவ்வளவு அருமை பெருமை வாய்ந்த நூற் கருவூலங்களையும் அளவை நூலுக்குப் பிறழாத சைவவுண்மைகளையும் நம் பண்டையோர் நமக்குதவியிருப்ப அப்பொருட்பயன்களை அடையாமலும், அப்பெரியார் நன்றியை மறந்தும், அவரருளிய உண்மைகளையும் அவரையும் இகழ்ந்தும் பேசிவரும் தமிழரில் ஒரு சாரார் கொள்கை மிகவும் இரங்கத்தக்கதொன்று. இம் மாறுபட்ட கொள்கைகள் மக்கட்டன்மையிலிருந்து விலங்குத் தன்மைக்கு ஈர்த்துச் செல்லும் நிலையிலுள்ளன.

இப்பிறழ்ச்சிக் கொள்கைகளெல்லாம் ஒழிந்து நன்னெறிப் படுதற்கு அறிவுடையார் முற்படுதல் வேண்டும். கல்விக்கண்ணினும் சிறந்தது சமயக்கண். அக்கண் கொண்டு காண்டலே உண்மைக்காட்சியாகும். அக்காட்சியிற் றலைப்பட்டுப் பேரானந்தப் பெருஞ் செல்வர்களாக இம்மை மறுமை வாழ்க்கை நலங்களையும், இருமையும் கடந்த வீட்டின்பத்தையும் அன்புரிமைச் சோதரர்கள் அடையவேண்டுமென்பதே என் குறிக்கோள்.

இதற்குக் கருவியாயுள்ள இச்சைவ சித்தாந்த சபையும் இதனுறுப்பினராகிய அன்பர்களும் மற்றைய சிவநேசச் செல்வர்களும் நீடு வாழ்க வெனச் சிவபிரான் திருவருளைத் துணையாகக் கொண்டு வாழ்த்துகின்றேன்.

---

## தமிழ் வித்துவான் சங்கம், சென்னை.

### திரு. வி. க. மணிவிழாப் பரிசு.

இப்பரிசு ஆண்டுதோறும் அளிக்கப்பெறும். பரிசுத்தொகை ரூ. அறுபது (60-ரூ) தமிழ்க்கல்லூரிகளில் தமிழ் வித்துவான் வகுப்பில் முறையாகக் கல்வி பயிலும் மாணவர்களே இப்போட்டியில் கலந்து கொள்ளுதற்குரியர்.

**விதிகள்.**

1. தமிழ் வித்துவான் வகுப்பில் (3, 4-ஆம் ஆண்டுகளில்) பயிலும் மாணவர் யாவரும் இதில் கலந்து கொள்ளலாம். 2. 'பொருளிலக்கணமும் வாழ்க்கையும்' என்பது எழுத வேண்டிய கட்டுரையின் தலைப்பு. 3. இருபத்தைந்து பக்கங்கட்குக் குறையாத அளவில் கட்டுரை இருக்கவேண்டும். 4. கட்டுரையின் எந்த இடத்திலும் மாணவர் தங்களுடைய பெயரை எழுதலாகாது. 5. தனித்தாளில் மாணவர் பெயர், தந்தை பெயர், வயது, பயிலும் கல்லூரி, வகுப்பு ஆகியவற்றைக்குறித்து, கையெழுத்திட்டுத் தங்கள் கல்லூரித் தலைவரின் மேலொப்பம் வாங்கி, கட்டுரையுடன் சேர்த்தனுப்பவேண்டும். 6. 1944ஏப்ரல் 15-ந் தேதிக்குள் செயலாளர் கைக்குக்கட்டுரைகள் வந்து சேர வேண்டும். 7 கட்டுரைகளில்சிறந்ததாகக் கருதப்படும்ஒன்றுக்கு 1944 ஜூலை முதல் வாரத்தில் பரிசு அளிக்கப்படும். 8. பரிசு பெற்ற கட்டுரையின் எல்லா உரிமையும் சங்கத்தைச் சார்ந்தது. 9. சங்கம் ஏற்படுத்தியுள்ள ஐவர் கொண்ட குழு கட்டுரைகளை ஆய்ந்து முடிவு கூறும்; அம்முடிவே முடிவானது.

தமிழ் மாணவர் இவ்வாய்ப்பினை நன்கு பயன்படுத்திக் கொள்ளவேண்டுகிறோம்.

**தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்** தலைவர். **மு. இராசாக்கண்ணு** **அன்பு கணபதி**, செயலாளர்.

**2, சாலை விநாயகர் கோவில் தெரு, ஜி. டி., சென்னை.**